


காஞ்சி ஸ்ரீ காமாட்சியம்மை

# காஞ்சனமாலை

காஞ்சி ஸ்ரீ காமாட்சியம்மை

# காஞ்சனமாலை

இயற்றியருளியவர் :

அருட்கவி. ஸ்ரீ. காளிதாசர்




வெளியிட்டோர் :

அருள்ஞானப் பெருவெளி

நடராசபுரம், புக்கத்துறை, மதுராந்தகம் வட்டம்
செங்கை மாவட்டம்

வெளியீடு எண் : 1 — 1979 — விலை ரூ. 1

# பதிப்புரை

சான்றோர் மிக்கது தொண்டை நன்னாடு. அதில் கல்வியிற் கரையிலாப் பெருமை உடையது, காஞ்சியம்பதி. முக்திதரும் அப்பதியில் அறங்கள் விளங்குமாறு 'காமாட்சி' என்னும் திருப்பெயரில் திருக்கோயில் கொண்ட பராபரை, அருள் நலத்தால் அடியவரை ஆண்டருள் புரிகின்றனள்.

அவ்வருளம்பிகை பால் அன்பு பூண்ட அருட்கவி ஸ்ரீ காளிதாசர் அவர்கள் பைந்தமிழால் "காஞ்சனமாலை" என்னும் பெயருடைய இப்பாமாலையைத் தொடுத்து அவள் திருச்சன்னதியில் பாடிச் சூட்டியுள்ளனர். அருட்கவியவர்கள் ஈடுபாடுடைய அருள்ஞானப் பெருவெளியின் ஆலயத் திருப்பணிக்கு உதவும் வகையில் இந்நூலைப் பதிப்பித்து வெளியிட்டு உரிமையினை அருள்ஞானப் பெருவெளிக்குக் காணிக்கையாக வழங்குகின்றோம். அருள் ஞானப் பெருவெளியில் வெளியிடப் பெறும் இந்நூலைப் பெறும் அன்பர்கள் தங்கள் ஆன்ம வளர்ச்சியைப் பெருக்கிக் கொள்வதுடன் ஆலயத் திருப்பணிக்கும் உதவியவர்களாவார்கள்.

இந்நூற்கு ஆசிமொழிகளைத் தந்து வாழ்த்திய தவத்துறை சான்ற மகா சன்னிதானங்களுக்கும் செந்நெறியினும் செந்தமிழினும் செறிந்து விளங்கும் அறிஞர் பெருமக்கட்கும் சிறந்த முறையில் அணிந்துரை அருளிய திருக்கோவலூர் ஆதீனம் திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகளுக்கும் நன்றியைச் செலுத்திக் கொள்கிறோம்.

இந்நூலை நல்லமுறையில் பதிப்பித்து வெளிப்படுத்துதற்குப் பல்லாற்றானும் செந்தமிழ்ச் சான்றாண்மை மிக்க சைவத் தமிழ்ச் சங்கத் தலைவரும் வாழ்வியற் புலவருமான திரு. சொ. ர. தேமொழியார் அவர்கள் கருத்துக்கள் வழங்கியமைக்கு என்றும் மறவா நன்றியுடையோம்.

இந்நூலை நன்கு பதிப்பிக்குமாறு பொருள் நனி தந்த பேரருள் வாழ் பெருமக்களான திருவாளர்கள் முருகன், சரவணன் மற்றும் இராமமூர்த்தி, பாலுச்சாமி, என்பார்க்கும் நன்றியுடையோம்.

மு. கச்சியப்பன்

தலைவர்,
அந்தரி அந்தாதி புத்தக வெளியீட்டு
விழாக் குழு
சென்னை—18

# ஆசிமொழிகள்

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

ஜகத்குரு. ஸ்ரீ. சங்கராசார்ய ஸ்வாமிகள் அருளிய

## ஸ்ரீ முகம்

முகாம்: காஞ்சிபுரம் தேதி: 28. 0. 1978



அனுமந்தபுரம் அருட் கவி ஸ்ரீ காளிதாசர் இயற்றியுள்ள "காஞ்சி ஸ்ரீ காமாக்ஷியம்மை காஞ்சன மாலை" என்னும் பாடல் ரூபமான துதியானது ஸ்ரீ காஞ்சி க்ஷேத்திரத்தில் விளங்கும் ஸ்ரீ காமாக்ஷி தேவியின் பெருமைகளை சப்தப்ராஸம், பொருட்செறிவு நிறைந்த பாடல்களால் விவரிக்கிறது.

ஆஸ்திகர்கள் ஸ்ரீ. மு. கச்சியப்பனின் மூலம் வெளியிடப்படும் இந்நூலின் உதவியுடன் ஸ்ரீ காமாக்ஷி தேவியை வழிபட்டுக் கொண்டு இத்தேவியின் அருளால் எல்லா மேன்மைகளையும் அடைவார்களாக.

-நாராயணஸ்ம்ருதி:

## ஆசிமொழிகள் :

"காஞ்சனமாலை" என்னும் நூல் ஸ்ரீ ஸ்ரீ மஹா சந்நிதானம் அவர்களின் பாதாரவிந்தங்களில் சமர்ப்பிக்கப்பட்டது. ஸ்ரீ காளிதாசர் இயற்றிய நூல் அவரது பக்தியை நன்கு எடுத்துக் காட்டுகிறது. ஸ்ரீ தேவியின் பரிபூர்ண அநுக்ரகம் உண்டாக அநுக்ரகித்துக் கொடுத்த ஸ்ரீ சாரதா சந்த்ரமௌலீஸ்வரர் பிரசாதம் இத்துடன் அனுப்பி வைக்கிறோம்.

—சிருங்கேரி ஸ்ரீ சாரதா பீடம் ஜகத்குரு
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளின் தனிச்செயலாளர்



அனுமந்தபுரம் அருட்கவி ஸ்ரீ காளிதாசர் ஸ்ரீ காஞ்சி காமாட்சியம்மை காஞ்சன மாலை என்னும் நூலை இயற்றி அம்மன் திருச்சந்நிதியில் பாடியுள்ளதை அறிந்து மகிழ்கிறோம். அதன் பிரதியினைப் பார்வையிட்டு நல்ல முறையில் அமைந்திருக்கிறதையெண்ணி உவகையுறுகிறோம். இவ்விதமான திருப்பணி மேன்மேலும் சிறந்தோங்கி வளர்ந்து நடைபெறத் திருவருள் பாலிக்குமாறு எல்லாம் வல்ல எம்பெருமானைப் பிரார்த்தித்து ஆசீர்வதிக்கிறோம்.

—மதுரை திருஞான சம்பந்த சுவாமிகள் ஆதீனம்,
291வது குருமஹா சன்னிதானம், திருவருள்
தவயோக ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த
தேசிக பரமாச்சாரிய சுவாமிகள்



"இல்லேனும் ஐய ஒரு காலத்தில் உருகும். என் கல் நெஞ்சம் உருகவில்லையே" என்பது ஸ்ரீ தாயுமான சுவாமிகள் திருவாக்கு. அத்தகைய கல்நெஞ்சையும் உருக்கி இறை யுணர்வைப் பதியச் செய்வன தோத்திர நூல்கள். அருளிய அருளாளர்களின் அருளனுபவத்திற்கு ஏற்ப அவை பயன் தரும். பல தோத்திர நூல்களை இயற்றிய அனுமந்தபுரம் அருட்கவி காளிதாசர், இப்போது "காஞ்சி காமாட்சியம்மை காஞ்சன மாலை" என்ற தோத்திர நூலை ஆக்கியுள்ளார். இந் நூலிலுள்ள இருபத்தைந்து பாடல்களும் காமாட்சியம்மை யின் அருள் நலன்களை அறிவிக்கின்றன. அன்பர்கள் பெற்று ஓதி இன்புறச் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக் கின்றோம்.

–திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்
26வது குருமஹா சன்னிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாச்சாரிய சுவாமிகள்



அனுமந்தபுரம் அருட்கவி ஸ்ரீ காளிதாசர் இயற்றிய "காஞ்சி ஸ்ரீ காமாட்சியம்மை காஞ்சன மாலை" என்னும் இலக்கியம் 25 பாக்களைக் கொண்டதாக உள்ளது. பல பாக்கள் முற்று மோனை பெற்றிருப்பது இலக்கணம் கற்றவர் களுக்கு வியப்பையும் மகிழ்வையும் தரும். தெய்வீகத்தை வற்புறுத்தும் இனிய பாடல்கள் கற்பவர்க்கு ஈடுபாடு தரும் என்பதில் ஐயமில்லை. ஸ்ரீ காளிதாசரின் பணி பாராட்டுதற் குரியது. இவரின் இத்தகு நற்பணிகள் தொடர வேண்டுமெனவும், ஞாலமெலாம் இறைநெறி தழைக்க வேண்டுமெனவும் செந்திற்கந்தன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

–திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
முத்துக் குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்

கபிலதேவ நாயனூர் என்னும் பேரறிஞர், "நூறு பசுக்களின் பாலைக் கறந்து இறைவனுக்கு அபிடேகம் செய்து நூறு மலர்களை இறைவன் திருவடியிற் சாத்தி, அவனது நூறு திருப்பெயர்களைக் கூறி வழிபாடு செய்வதைக் காட்டிலும், இறைவனைக் குறித்து ஒருபாட்டுப் பாடுவது சிறந்தது" என்று கூறுகிறூர்.

"நூறுன் பயன் ஆட்டி நூறு மலர்சொரிந்து
நூறு நொடிவதனின் மிக்கதே—நூறு
உடையான் பரித்தவெரி உத்தமனை வெள்ளே
றுடையானைப் பாடலால் ஒன்று."

இதனை நன்கு உணர்ந்து கொண்ட நம் அருட்கவி தவத்திரு காளிதாசர் அவர்கள் காஞ்சி காமாட்சியம்மையின்மேல் காஞ்சன மாலை என்ற சிற்றிலக்கிய மொன்றை இயற்றியுள்ளார்கள். இவர்தம் முயற்சி உலகிற்குப் பயன் தருவது; மிகவும் பாராட்டுதற் குரியது- இத்தகைய பல நற்பணிகளைச் செய்து அவர்கள் வாழ்ந்திருக்குமாறு இறைவன் திருவருளை நினைந்து வாழ்த்துரை வழங்குகின்றேன்.

—குகையூர் சித்தநாதேச்சுராதீனம்
தவத்திரு. அடிகளாசிரியர்



ஸ்ரீ காளிதாசர் அவர்களின் காஞ்சி ஸ்ரீ காமாட்சியம்மை காஞ்சன மாலை என்ற நூல் வெளியிட இருப்பது, மிக்க மகிழ் வளிக்கிறது. ஸ்ரீ காளிதாசரின் அருட்சுவை ததும்பும் வழி பாட்டு நூலினை வெளியிடும் புத்தகக் குழுவினருக்கு உளம் நிறைந்த பாராட்டுக்கள். வாழ்த்துக்கள். இன்னும் பல நூல்கள் வெளிவந்து தெய்வ நலம் பரவ திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

திருவண்ணாமலை ஆதீனம்,
தவத்திரு. குன்றக்குடி அடிகளார்

காஞ்சன மாலை என்னும் நூல் அருட்கவி திரு காளி தாசர் அவர்களால் இயற்றப்பெற்றது. சொற்சுவை நிறைந்து பத்திமையால் பாடும் அன்பர்க்கு இனிய விருந்தாக மிளிர்கிறது. அன்னை காமாட்சியம்மையைப் பல்வகையில் புகழ்ந்தேத்தும் இப்பனுவல், திருப்பணிக்கு உதவும் பாங்கில் வெளிவர இருப்பது குறித்து மகிழ்கின்றோம். இதனை வெளியிடும் புத்தக வெளியீட்டுக் குழுவினர்க்கு நலம் பலவும் எய்த வேண்டுமென அருள்மிகு அம்பலவாணர் அடி மலர் நினைந்து வாழ்த்துகின்றோம்.

–பேரூர் ஆதீனம் குருமஹா சன்னிதானம்
ஸ்ரீலஸ்ரீ சாந்தலிங்க இராமசாமியடிகள்



காஞ்சி காமாட்சியின் மீது பாடியுள்ள "காஞ்சன மாலை" பாடல்கள் இருபத்து ஐந்தையும் படித்து மகிழ்ந்தேன். அருள் திரு அம்மையின் திருவருளைப் பெறுவதற்கு உரிய அருங்கவிதைகள். இதனைப் பாடித்தந்த அருட்கவி அனுமந்தபுரம் காளிதாசர் அவர்களுக்கும், இதனைத் தேடித் தந்த அன்பர்களுக்கும் இறைவி காமாட்சியம்மை பெரும் பேறுகளை வாரி வழங்க வேண்டுமென வணங்கி வேண்டுகிறேன்.

–மூதறிஞர், முத்தமிழ்க்காவலர்
கி. ஆ. பெ. விசுவநாதம்



அன்பர் அருட்கவி ஸ்ரீ காளிதாசர் காஞ்சி ஸ்ரீ காமாட்சியம்மை மீது பாடிய காஞ்சன மாலை யென்னும் நூலைக் காணப் பெற்றோம். அன்பரது தெய்வப் பணியையும் தமிழ்ப் பணியையும் அறிந்து மகிழ்ச்சியுறுகின்றோம். அன்பர்கள் இந்நூலைப் பெற்று ஓதி அன்னையருள் பெறுவார்களாக. இந்நூலாசிரியர்க்கும் வெளியிடும் அன்பர்க்கும் எங்கள் மயிலம் முருகப் பெருமான் திருவருளும் எங்கள் ஆதி சிவஞானபாலய சுவாமிகள் திருவருளும் நல்வாழ்வு வாழ என்றும் துணை நிற்பதாகவென வாழ்த்துகிறோம்.

-மயிலம். பொம்மபுரம் ஆதீனம் குருமஹா

சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலயசுவாமிகள்



பெருமை வாய்ந்த அன்னை ஸ்ரீ காமாட்சி மீது அவள் சந்நிதியிலேயே பாடிய "காஞ்சி ஸ்ரீ காமாட்சியம்மை காஞ்சன மாலை" என்னும் அழகிய நூலை, அனுமந்தபுரம் அருட்கவி ஸ்ரீ காளிதாசர் அவர்கள் இயற்றியிருக்கிறார்கள். அன்னை ஸ்ரீ காமாட்சியின் பாதக்கமலங்களில் மிகவும் பக்தியுடன் சூட்டுகின்ற இப்பக்தி மலர் மணம் மிகுந்து சிறந்து விளங்கும் என்பதில் சந்தேகமில்லை. இந்நூலை வெளியிடும் பணியில் பங்குபெறும் அனைவரும், இந்நூலைப் பயிலும் பக்த கோடிகளும் சகலவிதமான நன்மைகளைப் பெற்று அன்னை ஸ்ரீ காமாட்சியின் திருவருளுக்குப் பாத்திரராகும்படி மன மொழி மெய்களால் பிரார்த்திக்கின்றேன்.

-ஸ்ரீலஸ்ரீ காயத்ரி சுவாமிகள்

பெருமை பெற்ற காமாட்சியம்மையை இனிய பாக்களால் வழிபடுகிறார், அனுமந்தபுரம் அருட்கவி ஸ்ரீ காளிதாசர். இவர் தமது வாக்கை வீண் போக்காமல், திருவருட் சக்தியைப் பாடும் பணியே பணியாக விளங்குகிறார், எதுகை மோனை நயமும் சொற்பொருட் செறிவும் கொண்ட இவர் வாக்கு, உள்ளத்தை அள்ளுகிறது. காஞ்னமாலை முற்று மோனையாக அமைந்துள்ளது. கட்டளைப்படி நடை கவின் பெறச் செல்லுகிறது. யாப்பணிச் செறிவுடன் பூப்பொலி வெய்தும் கவிதைகளைப் போற்றுகிறோம்.

—கவியோகி மகரிஷி சுத்தானந்த பாரதியார்



அனுமந்தபுரம் அருட்கவி ஸ்ரீ காளிதாசர் இயற்றிய "காஞ்சி ஸ்ரீ காமாட்சியம்மை காஞ்சன மாலை" என்னும் இந் நூல் இப்போது வெளியிடப்படுகிறது. கற்றோரும் கல்லாதாரும் உணர்ந்து பக்தியில் ஈடுபட்டுப் பாடிப் பரவசமடையும் வகையில், இந்நூலாசிரியர் பாடல்களைப் படைத்துள்ளார். இப்பாடல்கள் உள்ளுருகிப் போற்றத்தக்கவை. எளிய இனிய நடை, இப்பாடல்களில் கவித்திறனும் இசை நயமும் களிநடம் புரிகின்றன. இந்நூலாசிரியர் மேலும் பற்பல பாமாலைகள் இயற்றி, சக்தியின் புகழைப் பரப்பி, அன்னையின் அருளால் பல்வகை நலனும் பெற்றுப் பல்லாண்டு வாழ்வாராக! இந்நூலைப் பக்தியுடன் படித்து, பாராயணம் செய்வோர் சகல நன்மைகளும் பெற்று நல்வாழ்வு வாழ தேவியைப் பிரார்த்திக்கின்றேன்.

—திருவேற்காடு ஸ்ரீமத். சுவாமி இராமதாசர்



புதுக்கோட்டை ஸ்ரீ ஸத்குரு ஸதாசிவப்ருமேந்த்ர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள் அதிஷ்டானம் ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்கள், ஸ்ரீ மாதா புவனேச்வரி தேவியின் ஸ்மரண பூர்வகம் விசேஷ ஆசீர்வாதத்துடன் அநுக்ரஹித்து கீழ்க்கண்ட விபரத்தைத் தெரிவிக்கச் சொன்ன ஆக்ஞைப்படி விபரம் கொடுத்துள்ளோம்.

"காஞ்சன மாலை" கையெழுத்துப் பிரதியை ஸ்ரீமத் ஸத்குரு ஸ்வாமிகள் பார்வையிட்டு வெகு அற்புதமாக இருக்கிறதென்றும், அனுமந்தபுரம் அருட்கவி ஸ்ரீ காளிதாசர் அவர்களின் வேறு சில துதி நூல்களை அவர்கள் கண்டு திருப்தியடைந்திருப்பதும் இம்மாதிரி துதிகள், கவிதைகள் புனைவது இயற்கையாகவும் தெய்வீகமாகவும் ஏற்படுவதாகவும் அருட்கவி ஸ்ரீ காளிதாசர் நாவில் வாணி சரஸ்வதி மிகுந்த அருள்பாலித்திருப்பதாகவும் கூறியதுடன் இந்த "காஞ்சன மாலை" துதி காஞ்சிபுரம் ஸ்ரீ காமாக்ஷியம்மனை நம் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகிற மாதிரியிருக்கிறதென்றும், இம்மாதிரி விசேஷ வெளியீடுகளை சாத்தியமான போதெல்லாம் செய்து மக்களுக்கு சேவை செய்துகொண்டேயிருந்து வரவேண்டுமென்றும் ஸ்ரீமத் ஸத்குரு ஸ்வாமிகள் அவர்கள் மேலும் மேலும் கோடி கோடி விசேஷ ஆசிகளை அனுப்பிக்கொண்டேயிருக்கிறார்கள்.

–ஸ்ரீமத் ஸத்குரு ஸ்வாமிகள் ஆக்ஞைப்படி
S. N. ஈஸ்வரானந்தம் ஐயர்



ஓம்

திருச்சிற்றம்பலம்

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க

திருக்கயிலாய பரம்பரைத் திருக்கோவலூராதீனம்
திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீமத் ஞானியார் மடாலய
ஏழாம் குருமகா சன்னிதானம்

ஸ்ரீலஸ்ரீ சிவ சண்முக ஆறுமுக மெய்ஞ்ஞான
சிவாசாரிய சுவாமிகள் அளித்த

# அணிந்துரை

ஸுவர்ண ரங்கீம் ரத்ந பூஷாட்யாம்
ஸுக ஹஸ்தாம் சசிஸ்மிதாம்
காஞ்சீ நிவாஸிநீம் வந்தே காமாக்ஷீம்
காமதார்த்த தாம்.

பொன்னிற உறுப்புடையவளும், இரத்தின ஆபரண முடையவளும் கிளிதாங்கிய கையினையுடையவளும் புன்சிரிப்புடையவளும் காஞ்சிபுரத்தில் வசிப்பவளும் வேண்டுவோர் வேண்டுவனவற்றை ஈபவளும் ஆகிய காமாக்ஷியை வணங்குகிறேன்.

"பாட்டான நல்ல தொடையாய் போற்றி"
—திருநாவுக்கரசர்

"பெருகிய சிறப்பின் மிக்க அர்ச்சனை பாட்டேயாகும்"
—சேக்கிழார், இறைவன் திருவாக்காக அருள்கிறார்,

"பன்மாலைத் திரளிருக்கப் பாமாலைக்கே பட்சம் பராமர்க்கு"
—தாயுமானுர்

மேற்குறிப்பிட்ட வாக்குகளால் நீராட்டிப் பூச்சூட்டி வழிபாடு செய்யினும் பாமாலை சூட்டிப் பரவுதல் சிறப்புடைத்

தென்பது தெளிவுறும். ஈண்டு அநுமந்தபுரம் அருட்கவி ஸ்ரீ காளிதாசர் இயற்றிய "காஞ்சன மாலை" வெளிவருகிறது. இத்தகைய முயற்சி இந்நாள் மிகப்பெரிதும் பயன் தர வல்லதும் இன்றைய சமய உலகினுக்கு மிக மிக வேண்டற்தக்கதும் ஆகும்.

"காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சி காமாட்சியம்மே" என்பது நூற் பாடல்களின் ஈற்றடியின் பகுதியாக விளங்குவதாற் "காஞ்சன மாலை" என்ற பெயர் பொருந்துவதே. காஞ்சனம், கவுரம் என்பன பொன்னைக் குறிக்கும் பெயர்கள். பொன்னிறத்தினள் என்பதைப் புலப்படுத்தவே, காஞ்சன மாலை என்றும் அவள் அழைக்கப் பெறுகிறாள்.

கம்பாநதி தீரத்திலே, இறைவனைப் பூசித்த காமாட்சியின் உறுதிகாண எண்ணிய இறைவன் உலக தீர்த்தங்களையெல்லாம் அங்கு வருமாறு திருவுளம் பற்றினன். பெரு வெள்ளம் வந்தது. அன்னை நடுங்கி பூசாவேதியிலே வல முழந்தாளை ஊன்றி இரு கைகளாலும் பெருமான் திரு (மணல்) உருவினை அணைத்தாள். இறைவன் வளைத் தழும்பும் முலைத்தழும்பும் ஏற்ற திருவுருவுடன் அவ்விலிங்கத்தினின்று தோன்றினன்.

"காளி! உன் பூசை உவந்தோம், வேண்டுவகேள்" எனத்திருவாய் மலர்ந்தருளினன், அம்மை, "நாதா! என்நிறங்காரணமாக, என்னைக் 'காளி' என முன்னரே மந்த்ர மலையில் அழைத்தீர், (காளம்—கருப்பு) இப்போது என்னைக் 'கௌரி' என்றழைத்து எனக்குக் கௌர [பொன்] நிறம் அருள்க, என வேண்டினள். அவ்வாறே அழைத்துப் பொன்னிறத் தவளாக்கினன் என்பது காஞ்சிப் புராண வரலாறு,

காஞ்சன—பொன்னிறத்தவளே! (அடியவர்)நெஞ்சுறும், காஞ்சி காமாட்சி அம்மே என்பது உணரப்படும் முதற் பொருள். இனி, காஞ்சன நெஞ்சு—பொன் மனத்தில்

உறும்—வந்து தங்கி அருள் பாலிக்கும் காஞ்சி காமாட்சி அம்மை என இரண்டாவது பொருளும் ஏற்புடையதாய்த் தோன்றுகிறது. அன்பும் அருளும் செறிந்த நல்ல உள்ளம் படைத்த பெருமக்களைப் பொன்மனம் படைத்தவர் என உலகம் கூறுவதும் இயல்பன்றோ? அங்ஙனமாகிய செம்மனச் செல்வர் உளத்தகத்து நீங்காதுறைபவளன்றோ அன்னை!

1. காம=(அடியார்) இச்சைகளை அருளும், அக்ஷி—கண்களையுடையவள்.

2. கா+மா+அக்ஷி— கா—சரஸ்வதி; மா—இலக்குமி [இருவரையும்] அக்ஷீ—கண்களாகப் பெற்றவள்.

3. க+அ+ம+அக்ஷி = [க+அ=கா, தீர்க்க சந்தி] க—பிரமனையும், அ—விஷ்ணுவையும், ம—உருத்திரனையும் அக்ஷி=கண்களாற் படைப்பவள்—இம் மூவகைப் பொருளையும் பயக்கும் ஓர் சொல் காமாக்ஷி,

இம்மாலையின் இருபத்தைந்து பாடல்களையும் 40 முறை ஓதினல் காமாக்ஷி என்ற தூயநாமம் 1000 முறை நாவினல் நவிற்றி உய்தபேறு கிடைக்கும். அதுவே சகஸ்ர நாம அர்ச்சனையாவதோடு, பல திருநாமங்களையும் பயிலும் பேறு கிடைக்கிறது. அத்துடன் விநாயகன், முருகன், ஏகாம்பர நாதன், திருமால் முதலாம் தெய்வத்துதிகளும் அமைகின்றன.

இனி ஆழ்ந்து கற்போர் அகமலர் குவியப் பெறுவர் என்பதனுக்கு இரண்டே பாட்டுகளைக் காட்டி இவ்வுரையினை முடிப்போம்.

ஓங்கார ஸ்வரூபிணி, வாமி [இறைவனின் இடப்பாகத்துக்கு உரியவள்], வாணி [வந்திப்போர் நாவில் உறைபவள்] நேமியள், [சக்ரதாரிணி], த்ரிநேத்ரிணி [முக்கண்ணினை யுடையவள்], சிவகாமி [சிவபெருமானையே இச்சிப்பவள்] என்ற இவ்வாறு திருநாமங்கள் இரண்டாம்

பாட்டிற் பயின்று சிவன், காமாட்சி, பிரமன், சரஸ்வதி, திருமால் ஆம் தெய்வங்களை நினைவுறுத்தி யாவும் ஓரே பரம்பொருள் என்பதனைத் தெளிவு படுத்தல் காணலாம்.

ஒன்பதாம் பாட்டு இந்நூலின் சிகரமாகத் திகழ்கிறது. ஓங்காரத்துள்ளொளிரும் அன்னை, ஓங்காரஸ்மரணம் [எப்போதும் நினைத்தல்] செய்வார்க்கு, ஓங்கார ரீங்காரம் தருகிருள். இது எவ்வளவு உண்மை! ஸ்மரித்தவர் அவ்வுண்மையை உணர்வர். வாக்கு நால்வகை: மத்திமை, வைகரி பைசந்தி, சூக்குமை என்பன அவை. அவற்றுள் உள்ளத்துள் நீங்காமல் தன்முயற்சியின்றியே [பற்பல்காலும் பயின்ற தொடர்பால்] நாத ஓங்காரத்தைப் புலப்படுத்துபவள் அவளேயாகிருள்.

ஓங்கலின் ஓங்கிய ஒப்பரும் ஓமிசை ரீங்காரத்தால்—மலையிலே, மலைக்காட்டுக் காற்றிலே, மலை விழருவியிலே மலையரசியின் இன்னெலியாய் ஒலிப்பவள் மலைமகளேயாவதுடன் அதன் எதிரொலியாய், விண்காற்றிலே, மதகு நீரிலே, உழவர் ஓதையிலே, புள்ளொலிகளிலே அலைநீர்க் கடலோதையிலே ஒலிக்கிருள் என்று அவளது சர்வ வியாபகம் [எங்கும் நிறைந்த தன்மை] மிக அழகாகச் சித்தரிக்கப் பட்டுள்ளது.

இங்ஙனம் சிறப்புப் பல பொருந்திய இக்'காஞ்சனமாலை'யை இயற்றியவருக்கும் இதனை அச்சிட்டு வெளிப்படுத்தியவருக்கும்' "பத்துடன் இதுவும் சேர்த்துப் பதினென்று' என வாளா கிடத்திவிடாமற் பயின்றுபயின்று அம்மையின் அருளை வேண்டிப் பெரும் பிறவிக் கடலினின்று கரைசேரக் கருதும் அன்பர் யாவர்க்கும் எம்மடாலய முதற்குரு நாதர் திருவருளும் அவருக்கு நேரிற் காட்சி தந்து ஆறுமுறை தன் திருவடிகளை முடிசூட்டி உபதேசித்தருளிய அறுமுகச்செவ்வேள் திருவருளும் நலம் பலவற்றையும் நல்குமாக.

———

அருண்மொழியரசு
திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள்
வழங்கிய

## சாற்றுக்கவி

காஞ்சன மாலையெனும் கன்னித் தமிழ்ப்பாடல்
வாஞ்சையுடன் பாடி வளம்பெற்றான்—தேஞ்சொல்
திகழும் அருட்கவி சீர்காளி தாசன்
தகவுகவி வாழ்க தழைத்து.

✻

வாகீச கலாநிதி, கி. வா. ஜகந்நாதன் அவர்கள்
வழங்கிய

## சாற்றுக்கவி

கச்சியில் வாழ்ந்தருள் காமாட்சி
யம்மை கமலவடி
நச்சியோர் காஞ்சன மாலைப்
பெயரில் நயத்தமிழில்
உச்சித மாக இருபத்தைந்
தாங்கவி ஓதினனால்
மெச்சும் அருட்கவி காளிதா
சப்பெயர் மேயவனே.

ஒலித்துறை காட்டும் மறைப்பொரு
ளாகி உலகமெலாம்
கலித்துறை யும்படி நல்லருள்
செய்தகா மாட்சிபுகழ்
கலித்துறை யாற்கவி காளிதா
சன்சொல் கவின்துதியை
பலித்துறை நற்பயன் கொள்ளப்
படிப்பவர் பாக்கியரே.

வட திருமுல்லைவாயில் ஸ்ரீ வைஷ்ணவி ஆலயம்

அருட்கவி. தவத்திரு. ஸாதுராம் ஸ்வாமிகள்

வழங்கிய

## சாற்றுக்கவி

காஞ்சன மாலைக் கழுத்திரீ
 காஞ்சிகா மாக்ஷிஅம்மை
வாய்ஞ்நன் மாலை, தமிழ்க்கவி
 யால்அநு மந்தபுரம்
தோய்ஞ்ச அருட்கவி ஸ்ரீகாளி
 தாஸர் தொடைபுனைந்து
வேய்ஞ்சனர் சூட்ட விரும்பி
 அணிந்தனள் மேதகவே

ஒலித்துறை மிக்கசொல் ஒண்தமிழ்
 வாழ உயர்கட்டளைக்
கலித்துறைப் பாவில் இருபத்தொ
 டைந்து கவிகளிலே
சொலித்துறை போயதொண் ணூற்ரு
 றுவகைச் சுவைப்பவந்தம்
சொலித்துரை மாலை யிற்காஞ்சன
 மாலையாச் சொற்றனரே.

காளிகை தாஸர் அட்கவி
 காஞ்சன மாலிகையாத்
தாளிணைத் தாமரைக் காமக்
 கணிக்கின்று சாத்தியநூல்
நாளிடை யீடின்றிப் பாரா
 யணம்செய்யும் நல்லவர்கள்
மாளிகை யிற்பணச் சாளிகை
 யோடென்றும் வாழ்வர்களே.

அருட்கவி ஸ்ரீ காளிதாசர் அருளிய

## காஞ்சி ஸ்ரீ காமாட்சியம்மை

# காஞ்சனமாலை



வன்னியில் வெம்புகை யன்ன
வொலிகழல் வண்டுறையும்
கன்னியள் காஞ்சிகா மாட்சிகொள்
காஞ்சன மாலையையென்

சென்னியில் செந்தமிழ்ச் சீர்த்தொடை
செய்தமை சால்பருளாய்
மன்னிய மாமறை மோதகம்
மல்கிடும் ஐங்கரனே. 1

ஓமிசை யுள்ளொளி ஓர்ந்திட
ஓதிடும் ஒண்பொருளாய்
வாமியள் வாணியள் வாசியேன்
வாய்மொழி வாழ்தகவின்
நேமியள் நேத்திர மூன்றுளீர்
நேரிழை நேயசிவ
காமியள் காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே. 2

கூளியின் கூட்டொடு கூத்துறுங்
கூகையின் கானெழுந்த
ஆளியின் மீதமர் அம்பிகை
அன்பினர் சித்தமுறத்
தாளிணை தந்தவள் தாமதந்
தானறுந் தன்மையருட்
காளியள் காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 3

வாரணன் வேலவன் வாரியின்
வாழ்பவன் வல்லசுரர்
ஆரமு தாள்பவன் அந்தகன்
ஆதவன் அங்கியொடு
நாரணன் நான்முகன் நாயகன்
நாடொறும் நாடவருட்
காரன காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 4

அற்புத அம்பரத் தாண்டருள்
அந்தரி அம்பிகைசீர்ப்
பொற்பதப் பொற்சிகை பார்க்கிலாப்
பொக்கமார் போதனரி
நற்புகழ் நல்கிடும் நாரியர்
நாடொறும் நாமமுரை
கற்பினள் காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 5

மூவிழி முச்சுடர் மூண்டவன்
மூரலான் முப்புரமுன்
கூவியே நைந்திட ஏவிணை
ஏந்திய ஏகனணை
ஓவியத் தொப்பிலா ஒண்டொடி
ஒல்லையின் ஓடைவளர்
காவியள் காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 6

எப்பிரான் என்றடி ஏத்திடும்
எண்ணரும் ஏதமிலா
உம்பரார் வாழ்த்திட ஊனிகழ்
உத்தமர் உள்ளமுறும்
கொம்பரார் பூங்கொடி கொண்டலங்
கொற்றவை கொக்கிறகார்
கம்பரார் காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 7

விண்ணியல் ஆர்புனல் வாழ்வளி
வாசியின் வெங்கனலும்
மண்ணியல் ஆறெடு வெங்கதிர்
தண்கதிர் எண்குணத்தாள்

வெண்ணரியல் வீறுடை வெல்விடை
வெள்ளியின் வெற்புடைய
கண்ணரியர் காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 8

ஓங்கொலி ஓமென உள்ளுற
ஓதிட ரீங்கரித்தாள்
ஓங்கொளி ஓமெழுத் தாடுற
ஒன்றிடும் ஓவியமோர்
ஓங்கலின் ஓங்கிய ஒப்பரும்
ஓமிசை ரீங்கரத்தால்
காங்கைதீர் காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 9

ஆரியை ஆரழல் ஆரணி
ஆதியள் ஆகமத்தின்
பாரியை பாரெலாம் பாவுறும்
பான்மையள் பாகமுறும்
நாரியள் நான்முகி நாரணி
நாதியள் நான்மறைசேர்
காரிகைக் காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 10

ஏரணி ஏறுறும் ஏந்தலாம்
ஏகனின் எண்குணத்து
நாரணி நாயகி நல்லறம்
நல்கிட நாட்டமுறும்
ஆரணி அம்புலி ஆறணி
அஞ்சடை ஆதியெனுங்
காரணி காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 11

நீட்சிகை நீணிலா நீடுறும்
நீலியள் நீதமுறும்
ஆட்சியள் ஆசறும் ஆகம
ஆனன ஆதனத்தின்
மாட்சியள் மாதவ மாகிய
மாமயில் மாவடிவாழ்
காட்சியள் காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 12

மஞ்சுகு மாரியள் மாதவம்
மல்கிய மாக்கருணை
அஞ்சுகும் ஆயநல் அம்பிகை
அஞ்சொலின் ஆரணத்தள்
தஞ்சுகந் தான்பெரி தாமெனுந்
தன்மையைத் தாழ்த்தியவர்
கஞ்சுகும் காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 13

எண்ணிணும் எத்திசை ஏத்தினும்
எங்கணும் என்றுமுள
பண்ணிணைப் பாவுறப் பாடிடும்
பத்தரின் பற்றுறுவாள்
ஒண்ணகை ஒண்டொடி ஒன்றுறும்
ஒப்பரும் ஒண்ணுதலார்
கண்ணினள் காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 14

நண்ணிய நாயகன் நல்லிடம்
நல்கிடும் நற்றவத்தள்
தண்ணியல் தாமரை தானுறை
தன்மையள் தங்குபவள்

பண்ணியற் பாவினிற் பாங்குற
பான்மதிப் பன்மலர்சேர்
கண்ணியள் காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 15

ஆர்த்திடும் ஆணவ மாசெலாம்
ஆழ்த்திடும் ஆரணத்தள்
தோத்திரம் ஓதிடத் தோன்றிடுந்
தோடுடைத் தோகையவள்
ஈர்த்தருள் ஈந்திட ஏறுகை
ஈடிலா ஈசனுறும்
கார்த்திகை காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 16

வன்மமில் வாய்மொழி வாழ்வினர்
வாக்குறும் வாகையுற்ருள்
பன்மலர்ப் பொற்சடைப் பிஞ்சகன்
பங்குறும் பார்வதியாள்
பொன்மரைப் பூம்பதம் போற்றிடும்
பொக்கமில் போதகத்தாள்
கன்மமில் காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 17

பொங்குறு புண்ணியப் பூம்புனற்
பொற்சடை பெற்றிலங்கும்
பிங்கலன் பங்குறும் பங்கயந்
தங்கிய பாதமுற்ருள்
குங்குமம் குந்தளம் குண்டலம்
கொண்டுறும் குண்டலினி
கங்கறு காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்ரிகா மாட்சியம்மே 18

அந்தகன் அல்லலை அன்பினுல்
அன்றழி ஆரமுதாள்
சந்தத சந்தன சுந்தர
சந்திர சந்தரிகொள்
அந்தரி அம்புய அம்பதம்
ஆற்றிய அற்புதத்தால்
கந்தழி காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 19

தாந்திமித் தாண்டவந் தானமை
தாரகத் தாமரைசேர்
சாந்தியைச் சாலவும் சாற்றிடும்
சாகரச் சாமஜாயாள்
பூந்துகிற் பூரண பூதலப்
பூசுரர் பூணகத்துக்
காந்தியள் காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 20

பாமரன் பாங்குறப் பாதகம்
பாற்றிய பான்மையவள்
மாமகு மாவடி மல்கிய
மாமயின் மாமணியாள்
தாமரைத் தண்ணடி தாரகந்
தானமர் தன்மையள்சீர்
காமரு காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 21

அங்கியை அங்கையி னேந்திசிற்
றம்பலத் தாடிமகிழ்
பங்கயப் பூங்கழற் பொற்பதப்
பண்ணவன் பங்குடைய

கொங்கையள் கொங்கலர் கொன்றையங்
கொத்தணி செஞ்சடைமேல்
கங்கையள் காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 22

அஞ்சனம் அப்பிடும் அங்கணி
ஆரியன் அன்புறுசீர்
பஞ்சன பல்லவ பாதமும்
பற்றிடும் பாங்கருள்வாள்
வெஞ்சின வெவ்வினை வீக்கியே
வீடருள் வெற்புடையாள்
கஞ்சன காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 23

தும்பையின் தூமலர் தூவுறுந்
துங்கமார் துர்க்கையெனும்
அம்பையள் அப்பினை அப்பிய
அஞ்சடை ஆடகம்சேர்
கொம்பையைக் கொண்டுறும் கொங்கை யள்
கொட்டமார் கோதையுறும்
கம்பையள் காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 24

சிற்பர சிட்டரின் சீர்திகழ்
சித்தமார் சிம்மமுறும்
கொற்றவை கொல்புலித் தோலுடைக்
காளியள் தாசரிசை
கற்பகக் காஞ்சன மாலையைக்
கண்ணுற வோதியுள்கிக்
கற்பவர் காஞ்சன நெஞ்சுறுங்
காஞ்சிகா மாட்சியம்மே 25

———

# சொல்லும் பொருளும்

நூல் என்பது, அற உணர்வைப் பெருக்குவது, பொருள் திறத்தை விளக்குவது, இனிய நினைவை ஊட்டுவது; நிறை நலத்தை வழங்குவது, இத்தகைய நூல்கள் காலங்கள் தோறும் தோன்றும். அது பாட்டாகவும் உரையாகவும் அமையும்.

காஞ்சன மாலை என்ற நூல் காஞ்சி காமாட்சி அம்மையின் மீது பாடப்பெற்ற பாமாலை. இது கட்டளைக் கலித்துறையால் அமைந்துள்ளது. இதனை அருட்கவி காளிதாசர் அவர்கள் பாடியுள்ளார். அதற்கொரு அழகியப் பொழிப்புரையும் அவரே வரைந்துள்ளார். திறம் பாராட்டுதற்குரியது.

அருட்கவி காளிதாசர் அவர்கள் பணிவும் பண்பும் மிக்கவர். இனிமையும் எளிமையும் நிறைந்த அவர் உள்ளக்கிளர்ச்சியே காஞ்சன மாலை. இது தமிழ் அன்னைக்குப் புத்தம் புதிய பொன்னாரம். அடியேன் பார்க்க வாய்ப்பேற்பட்டமை குறித்து மகிழ்வு எய்துகின்றேன். திரு. அருட்கவி. காளிதாசர் அவர்களுக்கு எல்லாம் வல்ல அன்னையின் அருள்பாலிப்பதாக.

—அருள்ஞானப் பெருவெளித் திருத்தொண்டர்
வாழ்வியற்புலவர்.
தவத்திரு. சொ. ர. தேமொழியார்
(தலைவர், சைதைத் தமிழ்ச்சங்கம்)

## " காஞ்சனமாலை கருத்துரை"

பூக்களால் தொடுக்கப்படுவது பூமாலையாதல் போலப் பாக்களால் தொடுக்கப் படுவது பாமாலையாகும். மலர் மாலைக்கு இத்தனைதான் மலர்கள் என்ற கணக்கின்றியிருத்தல் போலப் பாமாலைக்கும் இத்தனை பாடல்கள் தான் என்ற வரையறை அமையவில்லை. பாமாலைகள் எண்ணிக்கை அளவின் காரணத்தால் நவமணிமாலை, இரட்டை மணிமாலை, மும்மணிமாலை, நான்மணிமாலை என வழங்குவதுண்டு. இக்காஞ்சனமாலை இருபத்தைந்து பாடல்களைக் கொண்டது, காஞ்சனம் என்பது பொன்; பொன் போன்ற அடியவர் உள்ளத்தில் அமர்ந்து பொலிவு தரும் காஞ்சி காமாட்சியம்மையின் அருள்நல மாட்சிமையைச் சொற்சுவை பொருட்சுவை நிறைந்த பாடல்களால் பாராட்டப் பெற்றமையால் இந்நூல் காஞ்சன மாலை எனப் பெயர் பெற்றது. இந்நூலின் முதற்செய்யுள், நூல் செய்யும் பொருட்டு மூலப் பொருளை முதற்கண் இறைஞ்சி அருள்பெறுதலையும் ஏனைய செய்யுட்கள் பரையாகிய அருட் சத்தியின் அருள்நல வரலாற்றைக் கூறுவதாகவும் அமைத்துள்ளன.

### 1

வன்னியில் வெம்புகை அன்ன வொலிகழல் வண்டுறையும்
கன்னியள் காஞ்சிகா மாட்சிகொள் காஞ்சன மாலையையென்
சென்னியில் செந்தமிழ்ச் சீர்த்தொடை செய்தமை
சால்பருளாய்
மன்னிய மாமறை மோதகம் மல்கிடும் ஐங்கரனே.

[கருத்துரை]

நிலைபெற்ற மாமறை எனும் ஆகமங்கள் மின்னி மிளிர்கின்ற அன்பர் அகத்தில் கருணை சிறந்து அமர்ந்து

ஒளிரும்! ஐங்கரப்பெருமானே! நாதம் ஒலிக்கின்ற திருவடியில் தீயிடையே எழுகின்ற புகையைப் போன்று வண்டுகள் சூழ்ந்து 'ரீம்' என்ற மந்திரம் ஒலித்து மகிழும் இளமைத் தன்மையள்; காஞ்சிமாநகரைப் பதியாகக் கொண்டவள். அவள் அணியத்தக்க பொன்போன்ற பாமாலையைச் செந்தமிழால் சீரும் தொடையும் சிறப்புற அமையும் வகையில் பாடும் தகுதியை அடியேனுக்கு அருள்வீராக.

## 2

ஓமிசை யுள்ளொளி ஓர்ந்திட ஓதிடும் ஒண்பொருளாய்
வாமியள் வாணியள் வாசியேன் வாய்மொழி வாழ்தகவின்
நேமியள் நேத்திர மூன்ருெளிர் நேரிழை நேயசிவ
காமியள் காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே.

[கருத்துரை]

ஓம் என்ற மந்திரத்தில் இசைந்து நிற்பவள்: அதன் உள் கிளர்ந்தெழும் ஒளியானவள்; ஒண்பொருளாய் நின்று அடியார் உணரும் வண்ணம் ஓதிடும் வாமியள்; கலையின் வடிவமாய் மலர்பவள்; கல்லாத என்போன்ருேர் மொழியும் வாழும் தகுதியை அளிப்பவள், நீதியாய் இயங்குபவள்; ஒளிரும் மூன்று விழிகளையுடைய நேரிழை; சிவத்தை விரும்பி நெகிழ்ச்சியுறும் இயல்பினள்; பொன் போன்ருர் நெஞ்சுள் அமர்பவள்; காஞ்சிமா நகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

## 3

கூளியின் கூட்டொடு கூத்துறுங் கூகையின் கானெழுந்த
ஆளியின் மீதமர் அம்பிகை அன்பினர் சித்தமுறத்
தாளிணை தந்தவள் தாமதந் தானுறுந் தன்மையருட்
காளியள் காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே

[கருத்துரை]

பேய்க்கூட்டத்துடன் கூகைகளும் கூத்து இயற்றும் அக்காட்டில் சிங்கத்தின் மீது அமர்ந்து பொலிவு தரும்

சிறப்பினள்; அன்புமிக்க அடியவர் சித்தம் உறைபவள்: என் போன்ருர் உள்ளத்தில் அவள் தம் இணையடிகளைத் தந்து எம் ஆன்மாவில் உறைகின்ற இழிவாம் தமோகுணம் முதலியவற்றை அழிப்பவள்; அதனுல் காளி எனப்பெயர் பெற்று அருள் புரிபவள்; பொன் போன்ருர் நெஞ்சுள் அமர்பவள்; காஞ்சிமாநகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

## 4

வாரணன் வேலவன் வாரியின் வாழ்பவன் வல்லசுரர்
ஆரமு தாள்பவன் அந்தகன் ஆதவன் அங்கியொடு
நாரணன் நான்முகன் நாயகன் நாடொறும் நாடவருட்
காரன காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே

[கருத்துரை]

விநாயகன், வேலவன், வருணன் அமுதத்தைத் தன் ஆளுகைக்கு உட்படுத்திக் கொண்ட இந்திரன், நமன், சூரியன், அக்கினி முதலான தேவர்களுடன் திருமால், பிரமன், நாதனும் சிவனும் தன்பால் வருங்கால் மேகத்தைப் போன்று அருள் புரிகின்றவள்; பொன் போன்ருர் நெஞ்சுள் அமர்பவள்; காஞ்சிமாநகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

## 5

அற்புத அம்பரத் தாண்டருள் அந்தரி அம்பிகைசீர்ப்
பொற்பதப் பொற்சிகை பார்க்கிலாப் பொக்கமார் போதனரி
நற்புகழ் நல்கிடும் நாரியர் நாடொறும் நாமமுரை
கற்பினள் காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே

[கருத்துரை]

கோலம் மிக்க அற்புதப் பரவெளியில் நின்று ஆண்டு அருள் புரிபவள்; உள்முக வெளியில் வல்லமையாய் நின்று இயங்குபவள். அவள் தன் சீர்மை மிக்க அழகிய திருவடியும் திருமுடியும் எவரும் காண இயலாதவை; மூனப்

புடைய மாலும் அயனும் குறைபட்டு நின்றனர். நல்லடி யாருக்கு நிலைத்த புகழை அளிக்க வல்லவள். அன்பின் வடிவாய் ஆன்மாவில் இணைபவள்; திருமகளும் கலைமக ளும் நாடொறும் போற்றிப் புகழும் கற்பினள்; பொன் போன்றார் நெஞ்சுள் அமர்பவள்; காஞ்சிமாநகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

## 6

மூவிழி முச்சுடர் மூண்டவன் மூரலான் முப்புரமுன்
கூவியே நைந்திட ஏவினை ஏந்திய ஏகனணை
ஓவியத் தொப்பிலா ஒண்டொடி ஒல்லையின் ஓடைவளர்
காவியள் காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே.

[கருத்துரை]

காமனைத் தகனம் செய்ய தன்மூன்று கண்களில் தீப் பொறி தோன்றத் திகழ்ந்தவனும் முன்னொரு காலத்தில் சிரிப் பினால் முப்புரத்தினர் (ஆணவ, கன்ம, மாயா மலக் குணத்தி னர்) ஓலமிட்டு நைந்திடும் பொருட்டு திருமாலாகிய (சுத்த மாயை) அம்பினை ஏந்தியவனும் ஆகிய ஏகம்ப நாதனைத் தழுவுகின்ற ஒளிபொருந்திய வளைக்கரத்தாள்; ஓவியத்தி லும் ஒப்பில்லாதவள்; ஓடையில் விரைந்து வளர்ந்து மலர் கின்ற நீலோற்ப மலர் அனைய நிறத்தினள், பொன்போன் றார் நெஞ்சுள் அமர்பவள்; காஞ்சி மாநகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

## 7

எம்பிரான் என்றடி ஏத்திடும் எண்ணரும் ஏதமிலா
உம்பரார் வாழ்த்திட ஊனிகழ உத்தமர் உள்ளமுறும்
கொம்பரார் பூங்கொடி கொண்டலங் கொற்றவை
கொக்கிறகார்
கம்பரார் காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே.

[கருத்துரை]

எமது இறைவன் என்று அவன் திருவடிகளைத் துதித்திடும் எண்ணுதற்கரிய துன்பமொன்றில்லா மேலோர்கள் வாழ்த்தும்படி, ஊனை வெறுக்கும் உத்தமர்தம் உள்ளத்தில் உறுபவள், கொழுகொம்பிற் படரும் பூங்கொடி அனையவள்' மேகத்தைப் போன்ற அழகிய கொற்றவை; கொக்கின் இறகைச் சூடிய ஏகம்பநாதரோடு பொருந்தியவள்; பொன் போன்றார் நெஞ்சுள் அமர்பவள்; காஞ்சி மாநகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

## 8

விண்ணியல் ஆர்புனல் வாழ்வளி வாசியின் வெங்கனலும்
மண்ணியல் ஆனெடு வெங்கதிர் தண்கதிர் எண்குணத்தாள்
வெண்ணியல் வீறுடை வெல்விடை வெள்ளியின் வெற்புடைய
கண்ணியர் காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே.

[கருத்துரை]

விண்ணியலாம் அருள் நிறைவும் வாழ்வியலை ஊக்கும் காற்றும் வெம்மையான தீயும் புவியில் இயைந்து வாழும் ஆன்மாவுடன் சூரியன், சந்திரன் ஆகிய எட்டு வகைக் குணங்கள் உடையவள்; வெண்மையை இயல்பாகக் கொண்டு விளங்க ஆற்றலும் வெற்றியும் உடைய நந்தியம் பெருமான் தனக்கு உறுதியாகவும் இடமாகவும் கொண்டு விளங்கும் திருக்கயிலாய மலையுடைய கருத்தினர், பொன் போன்றார் நெஞ்சுள் அமர்பவள்; காஞ்சி மாநகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

## ௯

ஓங்கொலி ஓமென உள்ளூற ஓதிட ரீங்கரித்தாள்
ஓங்கொளி ஓமெழுத் தூடுற ஒன்றிடும் ஓவியமோர்
ஓங்கலின் ஓங்கிய ஒப்பரும் ஓமிசை ரீங்கரத்தால்
காங்கைதீர் காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே.

[கருத்துரை]

மிக்கு நுட்பமாக ஒலிக்கின்ற 'ஓம்' என்னும் பிரணவத்தின் உள்ளூற நின்று ஓதிட ரீங்கரித்தவள், மூல நாதத்தை வழங்குபவள். பேரொளியாகப் பிரணவ வடிவினில் நிலைத்து சித்திரம் போல் தங்கியவள்; துரிய மலையின் மேல் விளங்குகின்ற இணையிலாத பிரணவ இசையாகிய நாதத்தால் கொடுமைகளைக் களைபவள்; பொன் போன்றூர் நெஞ்சுள் அமர்பவள். காஞ்சிமா நகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

## 10

ஆரியை ஆரழல் ஆரணி ஆதியள் ஆகமத்தின்
பாரியை பாரெலாம் பாவுறும் பான்மையள் பாகமுறும்
நாரியள் நான்முகி நாரணி நாதியள் நான்மறைசேர்
காரிகைக் காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே

[கருத்துரை]

ஆன்மாக்களின் பாசபந்தங்களை அறுத்து அருள் பாலிக்கும் அன்னை; அழகிய சுடர் போன்ற காளியள், ஆதி சத்தியள், ஆகமமாகிய சிவத்தின் துணையானவள். சிவத்தின் இடபாகத்தைக் கொண்டவள், பிரமசத்தியள், நாராயணி, அண்டினவர்க்கு அருள் சுரந்து ஆதரம் அளிப்பவள். நான்மறைகள் நாடி நலம்பெறும் கருணை வடிவினள். பொன் போன்றூர் நெஞ்சுள் அமர்பவள்; காஞ்சிமா நகரில் ஆட்சி புரியும் அன்னை.

## 11

ஏரணி ஏறுறும் ஏந்தலாம் ஏகனின் என்குணத்து
நாரணி நாயகி நல்லறம் நல்கிட நாட்டமுறும்
ஆரணி அம்புலி ஆறணி அஞ்சடை ஆதியெனுங்
காரணி காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே.

[கருத்துரை]

ஆன்மாக்கள் நலம்பெறும் செயலைத் தனக்கு அணியாக உடையவனும் விடைமீது அமரும் அண்ணலும் ஆகிய ஒருவனும் எண்குணம் நிறைந்த பெருமானோடு பொருந்திய நாயகியாம் நாரணி; நல்லறம் தழைத்திட நாட்டம் கொள்ளும் ஆரணி; அழகு நிரம்பிய நிலவும் ஆறும் அணிந்து கொள்ளும் சடையினள்; ஆதி சத்தியாய் மூலகாரணமாக விளங்கியவள், பொன்போன்றோர் நெஞ்சுள் அமர்பவள்; காஞ்சி மாநகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

## 12

நீட்சிகை நீணிலா நீடுறும் நீலியள் நீதமுறும்
ஆட்சியள் ஆசறும் ஆகம ஆனன ஆதனத்தின்
மாட்சியள் மாதவ மாகிய மாமயில் மாவடிவாழ்
காட்சியள் காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே.

[கருத்துரை]

உயர்ந்த சிரசின் மீது நீள் நிலவை நிலைபெறச் சூடும் நீல நிறத்தள்; நீதியில் பொருந்தி ஆட்சி புரிபவள்; குற்றமற்ற ஆகமம் என்ற சிங்கத்தின் மேல் அமர்ந்த மாட்சிமை உடையவள்; மயில் வடிவாகி மாதவம் புரிந்த அம்மை: மாவடியில் அமர்ந்த காட்சியள், பொன்போன்றோர் நெஞ்சுள் அமர்பவள், காஞ்சி மாநகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

## 13

மஞ்சுசு மாரியள் மாதவம் மல்கிய மாக்கருணை
அஞ்சுகும் ஆயநல் அம்பிகை அஞ்சொலின் ஆரணத்தள்
தஞ்சுகந் தான்பெரி தாமெனுந் தன்மையைத் தாழ்த்தியவர்
கஞ்சுகும் காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே.

[கருத்துரை]

கருக்கொண்ட மேகம் என நின்றவள்; அது துளிக்கும் நீரென அருள் சுரக்கும் ஆரியள், மாதவ வடிவினள்; கருணை பெருகிய நிலையினள். ஆயும் ஆன்மாவின் புலன் ஐந்தால் வரும் குற்றங்களை உகுமாறு செய்யும் நல் அம்பிகை, அறநெறி கூறும் வேத வடிவினள். தன்னலம் பெரிது என எண்ணாத தகுதியாளர், உள் உறுமலம் உகுமாறு செய்பவள். பொன்போன்றோர் நெஞ்சுள் அமர்பவள். காஞ்சி மாநகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

## 14

எண்ணரினும் எத்திசை ஏத்தினும் எங்கணும் என்றுமுள
பண்ணினைப் பாவுறப் பாடிடும் பத்தரின் பற்றுறுவாள்
ஒண்ணகை ஒண்டொடி ஒன்றுறும் ஒப்பரும் ஒண்ணுதலார்
கண்ணினள் காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே.

[கருத்துரை]

எந்தத் திக்கை நோக்கித் தொழுதாலும் சிந்தித்தாலும் எப்பொழுதும் விளங்கியிருக்கும் இசையினைப் பொருந்தும்படி பாடுகின்ற பத்தரின் நேயமாக விளங்கும் தன்மையினள். நகையையும் அழகுமிக்க வளையலையும் அணிந்தவள். ஒன்றினார்க்கு உற்று விளங்குகின்ற ஒப்பரிய நெற்றியில் நிறைந்து விளங்கும் ஒளி பொருந்திய கண்ணினை உடையவள். பொன்போன்றோர் நெஞ்சுள் அமர்பவள். காஞ்சிமாநகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

## 15

நண்ணிய நாயகன் நல்லிடம் நல்கிடும் நற்றவத்தள்
தண்ணியல் தாமரை தானுறை தன்மையள் தங்குபவள்
பண்ணியற் பாவினிற் பாங்குற பான்மதிப் பன்மலர்சேர்
கண்ணியன் காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே.

[கருத்துரை]

நாயகன் விரும்பி நல்லிடமாம் இடபாகத்தை நல்கப் பெற்ற நற்றவத்தள். குளிர்ச்சி பொருந்திய தாமரை மலரில் தானுறையும் தன்மையள். பண்ணின் இயல்போடு கூடிய பாவினில் பாங்குறும் வண்ணம் தங்கும் இயல்புடையவள். பால் நிலவைப் போன்ற முகத்தையும் பன்மலர்களால் தொடுக்கப்பட்ட மாலையையும் உடையவள். பொன் போன்றூர் நெஞ்சுள் அமர்பவள். காஞ்சிமாநகரை விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

## 16

ஆர்த்திடும் ஆணவ மாசெலாம் ஆழ்த்திடும் ஆரணத்தள்
தோத்திரம் ஓதிடத் தோன்றிடுந் தோடுடைத் தோகையவள்
ஈர்த்தருள் ஈந்திட ஏறுகை ஈடிலா ஈசனுறும்
கார்த்திகை காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே

[கருத்துரை]

ஆர்த்திடும் ஆரவாரம் செய்கின்ற ஆணவத்தின் விளைவாகிய குற்றங்களையெல்லாம் ஆழ்ந்து போமாறு செய்யும் மறை வடிவினள். மெய்யடியார் நெகிழ்ந்து பாடும் நிலையில் வெளிப்படுகின்ற குழையணிந்த மயிலையொத்த அம்மையவள். பக்குவமுற்ற ஆன்மாக்களை ஈர்த்து அருள் புரிந்திட விடைமீது அமர்ந்து வரும் ஈசனின் இடபால் பொருந்திய கார்த்திகை என்னும் அம்மை. பொன்போன்றூர் நெஞ்சுள் அமர்பவள். காஞ்சிமாநகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

## 17

வன்மமில் வாய்மொழி வாழ்வினர் வாக்குறும் வாகையுற்ருள்
பன்மலர்ப் பொற்சடைப் பிஞ்சகன் பங்குறும் பார்வதியாள்
பொன்மரைப் பூம்பதம் போற்றிடும் பொக்கமில்
போதகத்தாள்
கன்மமில் காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே.

[கருத்துரை]

பகைமையில்லா வாய்மை மிக்க மொழியுடையார் வாக்கினில் விளங்கும் வெற்றியாகப் பொருந்தியவள். பன்மலர் சூட்டப்பெற்ற பொன்னெளிர் சடை பொருந்திய பிஞ்சகன் றன் இடப்பாகத்தில் உறையும் பார்வதியாள். அழகுமிக்க தாமரைபோன்ற மென்மையான திருவடியைப் போற்றிடும் குற்றமில்லாத போதம் நிரம்பிய அகத்தைத் தன் ஆளுகைக்கு உட்படுத்திக் கொண்டவள். கன்மமில்லாத பொன் போன்ருர் நெஞ்சுள் அமர்பவள். காஞ்சி மாநகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

## 18

பொங்குறு புண்ணியப் பூம்புனற் பொற்சடை பெற்றிலங்கும்
பிங்கலன் பங்குறும் பங்கயந் தங்கிய பாதமுற்ருள்
குங்குமம் குந்தளம் குண்டலம் கொண்டுறும் குண்டலினி
கங்கறு காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே.

[கருத்துரை]

மங்கலம் நிரம்பிய குங்குமத்தையும் ஆற்றல் நிரம்பிய கூந்தலையும் மறைமொழி கேட்கும் காதையும் கொண்டு விளங்குகின்ற குண்டலியாய் எல்லையற்று நிற்பவள். பொன் போன்ற சடையில் அருள் நலம் ததும்புகின்ற புண்ணியமாம் தெளிந்த புனல் பொருந்துமாறு விளங்குகின்ற பிங்கலன் றன் ஒரு கூருய் விளங்கி, தாமரை மலர்கள் தவம் கிடக்கும் மாட்சிமை பொருந்திய திருவடிகளை உடையவள். பொன்போன்ருர் நெஞ்சுள் அமர்பவள். காஞ்சிமாநகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

# 19

அந்தகன் அல்லலை அன்பினுல் அன்றழி ஆரமுதாள்

சந்தத சந்தன சுந்தர சந்திர சந்தரிகொள்

அந்தரி அம்புய அம்பதம் ஆற்றிய அற்புதத்தால்

கந்தழி காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே

[கருத்துரை]

கூற்றுவனுல் வரும் துன்பத்தை எண்ணிச் சரண்புகுந்த ஆன்மாவிற்கு அன்பினுல் இரங்கி, காத்து அருட்செயும் அமிழ்த மயமானவள். இடையரு நறுமணமும் பேரெழிலும் ஒளியும் துளபமாலையும் அணிந்து உள்முக ஆற்றலாய் விளங்கும் தாமரைபோன்ற பூம்பதம் ஆற்றிய அற்புத இயக்கத்தால் பற்றுக்கோடு அழியுமாறு செய்தவள். பொன் போன்ளுர் நெஞ்சுள் அமர்பவள், காஞ்சிமாநகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை,

# 20

தாந்திமித் தாண்டவந் தானமை தாரகத் தாமரைசேர்

சாந்தியைச் சாலவுஞ் சாற்றிடுஞ் சாகரச் சாமளையாள்

பூந்துகிற் பூரணி பூதலப் பூசுரர் பூணகத்துக்

காந்தியள் காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே

[கருத்துரை]

'தாம்திமி' என்னும் சதியாகிய தாளவொத்துடன் கூடிய தாண்டவத்தால் அமையப்பெற்ற மூல மந்திரமாகிய ஓங்காரமாம் மலர்மிசை அணைந்ததால் சாந்த சொரூபத்தை மிகவும் தந்திடும் கடல் போன்ற வண்ணமுடையவள். பூந்துகில் அணியப் பெற்ற நிறைவாம் தன்மையுடையவள். மலர்ந்த இவ்வுலகின்கண் மாதவம் இயற்றும் அந்தணர் உள்ளத்து நிறைசுடராய் நின்று ஒளிதருபவள், பொன் போன்ளுர் நெஞ்சுள் அமர்பவள். காஞ்சிமாநகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

## 21

பாமரன் பாங்குறப் பாதகம் பாற்றிய பான்மையவள்
மாமரு மாவடி மல்கிய மாமயின் மாமணியாள்
தாமரைத் தண்ணடி தாரகந் தானமர் தன்மையள்சீர்
காமரு காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே.

[கருத்துரை]

அறியாமை நிரம்பிய ஆன்மா பக்குவம் எய்திட பாதகம் என்ற மலத்தினைப் பொடிபடச் செய்த பண்புடையவள். சுத்தமாயையொடு பொருந்தி, சுத்தத்தைத் தனக்கு நிலைக் களனாகக் கொண்டு அருளைப் பெருக்கி ஊட்டும் அன்னை வடிவினள். பேரொளிப் பிழம்பாகத் திகழ்பவள். சீரை விரும்புகின்ற பொன்போன்றார் நெஞ்சுள் அமர்பவள். காஞ்சி மாநகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

## 22

அங்கியை அங்கையி னேந்திசிற் றம்பலத் தாடிமகிழ்
பங்கயப் பூங்கழற் பொற்பதப் பண்ணவன் பங்குடைய
கொங்கையள் கொங்கலர் கொன்றையங் கொத்தணி
செஞ்சடைமேல்
கங்கையள் காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே.

[கருத்துரை]

ஆன்மாக்களின் அழுக்கை அகற்றி தூய்மையில் நிறுத் தும் பொருட்டு தம் அழகிய கையில் தீயினை ஏந்தி அறிவு வெளியில் ஆடிமகிழுகின்ற தாமரை போன்ற மென்மையான கழலையணிந்த அழகிய திருவடியை உடைய அண்ணலின் இடபாகத்தில் உறைந்து இகநலமும் பர நலமும் உயிர் களுக்கு ஊட்டுபவள். மணம் நிறைந்து தேன் துளிர்க்கின்ற கொன்றை மலராகிய அழகிய கொத்தினைத் தம்செஞ்சடை

மேல் சூடி சிறப்புச் செய்யும் அருள் வடிவானவள். பொன் போன்றார் நெஞ்சுள் அமர்பவள். காஞ்சிமா நகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

## 23

அஞ்சனம் அப்பிடும் அங்கணி ஆரியன் அன்புறுசீர்
பஞ்சன பல்லவ பாதமும் பற்றிடும் பாங்கருள்வாள்
வெஞ்சின வெவ்வினை வீக்கியே வீடருள் வெற்புடையாள்
கஞ்சன காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே

[கருத்துரை]

மைதீட்டி மிளிர்கின்ற அழகிய கண்களை உடையவள், பாசமாகிய கயிற்றை அறுக்கின்ற ஆன்மாவின் ஆச்சாரியனாகத் திகழும் ஐயனது அன்பினுறும் சீர்மைமிக்க பஞ்சு போன்றதும் தாமரை யொத்ததுமான திருவடிகளைப் பற்றிக் கொள்ளும் பக்குவத்தை அருள்பவள், வெஞ்சினத்தையும் இருவினையையும் வீழ்த்தி வீடருளும் வெற்பைத் தனக்கு இருப்பிடமாக உடையவள், பளிங்கனையார், பொன்போன்றார் நெஞ்சுள் அமர்பவள். காஞ்சிமா நகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

## 24

தும்பையின் தூமலர் தூவுறுந் துங்கமார் துர்க்கையெனும்
அம்பையள் அப்பினை அப்பிய அஞ்சடை ஆடகஞ்சேர்
கொம்பையைக் கொண்டுறும் கொங்கையள் கொட்டமார்
கோதையுறும்
கம்பையள் காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சியம்மே

[கருத்துரை]

தும்பையின் தூய வெண்மலர்களைக் கொண்டு துதிக்கப் பெறுகின்ற சுத்த சத்தியளாய் விளங்கும் அம்பிகை. புனல்

கொள் சடையினள். பொற்றமிழைக் கொண்டு விளங்கும் மார்பகத்தினள். மணம் மிகுந்த மாலையை அணிந்து கம்பை நதியைத் தன்பாற் கொண்டவள். பொன் போன்ஞர் நெஞ்சுள் அமர்பவள், காஞ்சிமாநகரில் விரும்பி ஆட்சி புரியும் அன்னை.

## 25

சிற்பர சிட்டரின் சீர்திகழ் சித்தமார் சிம்மமுறும்
கொற்றவை கொல்புலித் தோலுடைக் காளியள் தாசரிசை
கற்பகக் காஞ்சன மாலையைக் கண்ணுற வோதியுள்கிக்
கற்பவர் காஞ்சன நெஞ்சுறுங் காஞ்சிகா மாட்சி யம்மே

[கருத்துரை]

நுண்வெளி என்னும் நாதவெளியில் நின்று ஒழுகும் ஞானியரின் சிறப்பு வெளிப்படுமாறு அவருளத்துளே அமர் பவள். சிம்மத்தைத் தனக்கு ஊர்தியாகக் கொண்டு வெற்றிச்செயலைப் புரிபவள், சினம் என்னும் புலியைக் கொன்று தனக்கு ஆடையாகக் கொண்டணிந்த வீரச்சிறப்பினள். அடியவர் இசைக்கும் அருள்நல நிறைவினள். அவள் தன் புகழ்பாடும் இப்பாமாலையாம் காஞ்சன மாலையைக் கற்ருேர் கேட்டோர் சிந்திப்போர் என்னும் பொன் போன்ருர் நெஞ்சுள் அமர்பவள். காஞ்சிமாநகரில் விரும்பி ஆட்சிபுரியும் அன்னை.

